8. ருவறப்பள்ளி ஸபை

# எண் : 117

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின நிலைக்கால்

அரசர் : சோழன், உத்தமன்

காலம் : கி.பி. 986

மொழி : தமிழ் தெ.இ.க.தொ. 19 - 409

செய்தி : உத்தமசோழனின் தாயார் பராந்தகன் மாதேவடிகள் என்ற செம்பியன் மாதேவியார் கொல்லிமலையிலுள்ள பன்னிரண்டு ஊராரிடத்து நூறு கழஞ்சுப் பொன் கொடுத்து அதன் வட்டியைக் கொண்டுவரும் வருவாயை ஒவ்வொரு திங்களும் அறப்பள்ளி ஈசுவரர் கோவிலில் சிறப்பு வழிபாடு நடத்த ஆவன செய்தமை.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ கே
2. ஈப்பரகேசரி பர்ம்ம (ற்) க்
3. கு செல்லா நிந்
4. ற யாண்டு 16
5. ஆவது கொல்
6. லி நாட்டுக் கொ
7. ல்லிமலை மே
8. ற் திருவறப்பள்
9. ளி ஆழ்வார்க்கு கண்
10. டந் மதுராந்தக
11. (ந்) நாராய (ன) ஸ்ரீ உத்
12. தம சோழதேவர்
13. தங்கள் ளாட்சி பிரா
14. ந்தகந் மாதேவ
15. டிகளா (ர்) செம்பியந்
16. மாதேவியார் கொ
17. ல்லிமலை நாடு உ
18. ள் காங்கயம் பருவூ
19. ர் ஊரலம் புந்த (ப்பு) ரம்
20. மேற்புந்தம் முத்
21. தூ ர் வெருணூ ர் வா
22. யலூ ர் மங்க
23. லம் க (யி) றங்க
24. ாடு நெடுவலம்
25. காமு (ஸ்) இவனைத்
26. தூ ர் (வ) சமும் செம்
27. பியந்மா தேவியார்
28. சந்தராதித்தவற்
29. நீ (ற்) க்க திங்கள் ஸங்கர
30. மத்துக்கு வைத்
31. தபொந் குடிஞை
32. க் கல்லால் நூ ற்று
33. க் கழஞ்ச பொ
34. ந் கொண்டோம் இ
35. வனைத் தூ ரோமும்
36. இதுக்கு வைத்த பெ
37. பாந் கழஞ்சிந் வா (ய்)
38. திங்கள் பிளவு பொ
39. ந் பலிசை (ய) ாக்கி வ
40. ந்த பொந் குடிஞைக் க
41. ல்லால் கழஞ்சே க
42. ால் திங்கள் ஒரு ஊராம் தி
43. ருவறப்பள்ளி ஸபை (ய)
44. ார் வசம் குடுப்பதாநே (ா)
45. ம் ஸபை

# எண் : 118

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் வடக்குப்புறச்சுவர்

அரசர் : சோழன், உத்தமன்

காலம் : கி.பி. 981

மொழி : தமிழ் தெ.இ.க.தொ. 19 - 291

செய்தி : அறப்பள்ளி ஈசுவரர் கோவிலில் பணி செய்து வந்த 'மாணி' கள் நால்வர் கழஞ்சு பொன் பெற்றுக்கொண்டு வெருணூர் நிலத்தில் பயிர் செய்து விளைந்த அரிசியில் சந்தி ஒன்றுக்குத் 'திருவெள்ளறை காணம்' எனர அளவினால் நான்கு நாழியாக மூன்று சந்திக்கு பன்னிரு நாழி அரிசி பெற்றுப் பூசை செய்ய ஒப்புக்கொண்டமை.

கல்வெட்டு :

1. ஸ்ரீ கோப்பரகேசரி பந்மற்கு யாண்டு பதிநொன்றாவது திருவறப் பள்ளியுடையார்க்கு
2. திருவெள்ளறைக் காணத்தால் ஸந்தியொரோவொ
3. ந்றுக்கு நிருவமுர்தரிசி நாநாழியாக ஸ்ந்திமுந்றுக்கு அரிசி பந்நிரு நாழிக்கும் வெ
4. ருணூ ரில் நிலங்கொண்டு செய்து வருகிற மாணிகள் நால்வற்க்கு இடும்
5. பொந்கழஞ்சும் சந்ராதித்தற்

மாணி - துறவி

கருமாணியாய் இரந்த கள்வனே - திவ். இயற் 2.61

# எண் : 120

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் மேற்குப்புறச்சுவர்

அரசர் : . . . . . . . . . . . .

காலம் : கி.பி. 11 ஆம் நூற்றாண்டு

மொழி : தமிழ் க.ஆ.அ 494 - 1930

செய்தி : திருவறப்பள்ளி சபையாரிடம் இருபது கழஞ்சு பொன் பெற்று அதற்குக் கழஞ்சுக்கு ஆறு திங்களுக்கு வட்டியாகக் ஐங்குறுணி வீதம் இருபது கழஞ்சுக்கு ஆண்டுக்கு வட்டியாகப் பதினாறு கலனே இருதூ ணி நெல் பெறப்பட்டது. இந்த நெல்லில் கோவில் உவச்சு (மேளம்) கொட்டும் ஒருவனுக்கு நாள்தோறும் கொங்கம் என்னும் அளவால் மூன்று நாழியாக ஆண்டுக்குப் பதினொரு கலனே முக்குறுணி அளக்கப்பெற்றது. எஞ்சிய ஐங்கலனே ஐங்குறுணி நெல்லுடன் பருவூர் பலகுடிகள் பெற்ற கழஞ்சுப் பொன்னின் வட்டியும் சேர்த்து மொத்தம் பத்து கலனே குறுணியும் கோவிலில் மூன்று வேளையும் சங்கு ஓதுபவனுக்குக் கொடுக்கப்பெற்ற செய்தி.

கல்வெட்டு :

1. திருவறப்பள்ளி ஸபையயார் கடவ பொந் இருபதின் கழஞ்சு கழஞ்சின் வாயாற் திங்கள் ஐங்குறுணி ஆட்டை வட்டங் கடவ பூப்
2. பலிசை நெல்ப் பதிநாறு கலநே இருதூ ணி இந்த நெல் உவச்சு கொட்டும் ஆளில் ஒருவநுக்கு நித்தம் கொங்கத்தால் முந்நாழி ஆக ஒராட்டைக்கு நெ
3. ல் பதிநொரு கலநெ முக்குறுணியும் சந்தராதித்தவர் செல்லுவதாகவும் நீக்கி நெல் ஐங்கலநே ஐங்குறுணியும் பருவூரில்ப் பல குடிகளாய்க் கட
4. வ பொந் கழஞ்சு கழஞ்சிந் வாய் ஆறு திங்கள் தூ ணியாக ஆட்டை வட்டம் கடவ நெல் நார்க்கலநே இரு தூ ணியும் ஆக நெல் பதிந் கலநே குறுணியும் மூந்
5. று ஸந்திக்கு திருவிழா எடுக்கும்போது சங்கொத்துவாந் ஒருவனுக்கு சந்திராதித்தவர் செலுத்துவதாகவும்

கொங்கம் - அளவுப்பெயர்

## எண் : 119

| | | |
|---|---|---|
| இடம் | : | ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்<br>அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் வடக்குப்புறச்சுவர் |
| அரசர் | : | சோழன், உத்தமன் |
| காலம் | : | கி.பி. 984 |
| மொழி | : | தமிழ் தெ.இ.க.தொ. 19 - 360 |
| செய்தி | : | மழபெருமாள் என்பவரின் மருமகள் கணலைத்தாதியர் என்பவர் திருவறப்பள்ளி இறைவர்க்குக் கார்த்திகைத் திருநாளின்போது விளக்கு வைக்கக் கொல்லிமலை நாட்டாரிடம் 'மலைக்கல்' என்ற எடையினால் இரு கழஞ்சுப் பொன் கொடுத்த செய்தி. |



கல்வெட்டு :

1. கோப்பரகேசரிபற்மற்கு யாண்டு பதி
2. நாலாவது மழபெருமாள் மருமகள் கண (லை) தாதியார் அணிமுரி நாடாழ்வார் தேவியார் திருவறப்பள்ளி உடை யார்க்கு திருக் கார்த்திகை
3. த் திருநாளுக்குத் திருவிளக்கும் தகளிக்கும் கொல்லிமலை நாட்டார் வசம் வைத்த பொந் மலைக் கல்லால் இரு கழஞ்சு இத்தந்மம் இறக்குவாந் வ
4. ழி யேழேச்சம் மறுவாந் ரக்ஷித்தாந் ஸ்ரீபாதம் எந்தலைமேலின

மலைக்கல் - அளவுப்பெயர்

## எண் : 121

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் வடக்குப்புறச்சுவர்

அரசர் : சோழன், முதலாம் இராசேந்திரன்

காலம் : கி.பி. 1024

மொழி : தமிழ் க.ஆ.அ. 490 - 1929 - 30

செய்தி : திருவறப்பள்ளியுடைய இறைவர்க்கு முன்னரே திருவமுதுக்காகப் பெற்ற நிலத்தை இரட்டித்து வெருகனூரிலும் மங்கலத்திலும் நெல் வருவாய்க்கு ஆவன செய்யப்பெற்ற செய்தி.

கல்வெட்டு :

முதலாம் துண்டுக்கல்

1. ஸ்ரீ ராஜேந்த்ர சோழ தேவற்க்கு யாண்டு பந்திரண்டாவது திருவறப் பள்ளியுடையார்க்கு

இரண்டாம் துண்டுக்கல்

2. 1. முந்நஞ் சென்று வி (வ) ருகிற நிமந்நதத்தின் மேல் வாண்டு முதல் ஏற்றமாக இரட்டித்த திருவமுர்து யிதுக்கு
2. முந்நஞ் செந்று வருகிற வெருணூ ர் எண்கலநே இருநாழி நெல் விதையும் மங்கலத்து இருத்

மூன்றாம் துண்டுக்கல்

3. 1. (தி) ய முக்குறுணி நெல் விதையும் முத . . . முக்கலநே பத் . . . . க்கு நெல் விதையும் ஆ
2. . . வதின் மகுகல நெல் ஐங்குறுணி இருநாழி நெல் விதை நிலங்கொண்டு சந்திராதித

நான்காம் துண்டுக்கல்

4. 1. வ (ற்) செலுத்துவதாகவும்

## எண் : 124

**இடம்** : ஊர் - கொல்லிமலை  வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் தென்புறச்சுவர்

**அரசர்** : சோழன், இரண்டாம் இராசாதிராசன்

**காலம்** : கி.பி. 1172

**மொழி** : தமிழ்  க.ஆ.அ. 500 - 1929 - 30

**செய்தி** : பாண்டி குலாசனி வளநாட்டு இடையாற்று நாட்டுத் திருத்தவத்துறை யுடைய வீற்றிருந்தான் சேமாண்டரான பிள்ளை அகளங்க நாடாழ்வார்க்கு வீரசோழ ண்டலத்துக் கொல்லிமலை நாட்டைச் சேர்ந்த பல ஊரினர் அளித்த ஓர் உடன் பாட்டைத் தெரிவிக்கிறது. பிற்பகுதி சிதைந்துள்ளது.



**கல்வெட்டு :**

1. . . . . . . . . . . . . . . . . . . . .
2. திருபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீ யிராஜதிராஜ
3. தேவற்கு யாண்டு ஒந்பதாவது பாண்டி குலாச
4. னி வளநாட்டு இடையாற்றா ர் நாட்டுத் திருத்தவத்துறையு
5. டைய வீற்றிருந்தாந் சேமாண்டாராந பிள்ளை யகளங்க
6. நாடாழ்வார்க்கு வீரசோழ மண்டலத்துக் கொல்லிமழ
7. நாட்டு ஊரல்தூ ரும் பருவூரும் பந்நத்தூ ரும் முத்தூ ரூரும் வெரு
8. ணூ ரும் வாயலூரும் மங்கலத்தூ ரும் . . . /கிறா/ங்காட்டும் நெடுவத்
9. தூ ரும் காமுரூருங் கருங்கயத்தூ
10. /ரு/ முள்ளிட்ட ஊர்களுடையர் திரு
11. ப்பள்ளியுடையார் திருக்கற்ற . . . .

## எண் : 123

**இடம்** : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் தெற்குப்புறச்சுவர்

**அரசர்** : சோழன், இரண்டாம் இராசாதிராசன்

**காலம்** : கி.பி. 1172

**மொழி** : தமிழ் க.ஆ.அ. 499 - 1929 - 30

**செய்தி** : வீற்றிருந்தான் சேமாண்டரான பிள்ளை அகளங்க நாடாழ்வார்க்குக், கொல்லி மலை மலையாள நாட்டவர் கல்வெட்டிக் கொடுத்த கொடையைப் பற்றியது. ஆண்டுக்குக் கொங்கத்தால் தூணி தினையும் ஊரால் ஒரு புழுகும் அளிக்கப்பெற்றது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஶ்ரீ ஶ்ரீராஜராஜ
2. தேவற்கு யாண்டு ஒந்பதாவ
3. து வீற்றிருந்தாந் சேமாண்ட
4. ராந பிள்ளை யகளங்க நாட
5. ாழ்வார்க்கு கொல்லிமலை
6. குற்றக நாடு மலையாள
7. நாட்டோம் கல்வெட்டிக் குடு
8. த்த பரிசாவது இவாண்டு மு
9. தலெங்களூர்கள் தேவதாந நீ
10. க்கி யாட்டைக்கு கொங்கத்து ற்
11. கொடுவாந் தூ ணித் திநையும் ஊ
12. ரால் ஒரு புழுகும் திருப்புதியது
13. பச்சைய்த் திருக்காத்திகை உ

## எண் : 122

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் தென்மேற்குப்புறச்சுவர்

அரசர் : சோழன், முதலாம் குலோத்துங்கன்

காலம் : கி.பி. 1082

மொழி : தமிழ் க.ஆ.அ. 502 - 1929 - 30

செய்தி : இராசமகேந்திர தேவர் ஆட்சிக்காலத்தில் கொல்லிமலை நாட்டில் வாயனூ ரார் செலுத்த வேண்டிய வரியைத் திருவறப்பள்ளி இறைவர்க்குச் செலுத்துமாறு ஆவன செய்யப்பெற்றது. அப்பணி தொடர்ந்து நடைபெறவில்லை. அரசனின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் கொல்லிமலை நாட்டாரும் கோவில் தாந்ததாரும் பல மண்டலத்து மாயேசுவரர்களும் அதை மீண்டு நடைமுறைக்குக் கொண்டு வந்தனர். அதனால் வயலூ ராரிடமிருந்து வரவேண்டிய நான்கு கல நெல் விதைப்பாட்டளவினால் நிலவருவாய் மீண்டும் அறப்பள்ளி இறைவர்க்கு உரிமை யாக்கப்பெற்றது.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ ராஜமஹேந்திர தேவ
2. ற்கு கொல்லிமலை நாடு இறை
3. இறுத்தபோது வயலூ ர் இறை
4. விடையார் திருவறப்பள்ளி விடையாற்கு சி
5. றம்பாக விட்டுச் சென்று செல்லா
6. மையால் செல்விதாக கொலோத்து
7. ங்க சோழதேவற்கு யாண்டு
8. பன்னிரண்டாவதில் கொல்லிமலை னாடும்
9. திருவறப்பள்ளித்தாநமும் திருவன
10. . . . . . னில்த் தாநமும் பல மண்டல
11. த்தில் மாயேஸ்வரரும் இச்சிறப்ப
12. ச் செல்ல வேணுமெந்றும் வாய
13. லூ ராரை இக்கழி நாற்கல நெல் வி
14. தையும் விடுவித்து கல்வெட்டு வி
15. த்தோம் இந்நிலம் குஞ்சப்பள்ளிப் பரப்பில்
16. தூ ணிபதக்கிருநாழி பெருதுறை ஆற்றில் முக்
17. குறுணி னானாழி புலத்துறை கழநி இரு
18. நாழி குறைய தூ ணி ஊர் கழனிஇயில் இரு தூ
19. ணி இருநாழி மணக்கண் பரப்பில் ஐங்குறுணி இருநாழி நா இ
20. னத்தில் கழநி ஐங்கு
21. றுணி பாசி கழனி தூ ணி
22. பதக்கு ஆத்திகுழி கழ
23. நி இருதூணி சோலை க
24. ழனி பன்னிருநாழி வ





25. டலூர் கழனி இருநா
26. ழி குறையப் பதக்கு

## எண் : 115

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறை நுழைவாயில் இடப்பக்கம்

அரசர் : சோழன், உத்தமசோழன்

காலம் : கி.பி. 980

மொழி : தமிழ் தெ.இ.க.தொ 19 - 274

செய்தி : பிரதிகண்டன் என்பவன் திருவறப்பள்ளி ஆழ்வாருக்குக் கார்த்திகைத் திருவிழாவிற்குச் சாலைப்புறமாகக் குளம் உட்படக் கால்செய் நிலத்தைக் கொடையாக அளித்தமை.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ கே
2. ஸரிபரகேசரிபந்
3. மற்க்கு செல்ல
4. ஙநின்ற (ப) ஊண்
5. டு பத்தாவது
6. ப்ரதி கண்டன்
7. தரச்சோழந் தி
8. ருவறப்பள்ளி யா
9. ழ்வார்க்கு காத்தி
10. கை காத்திகைத்
11. திருவிழாவுக்கு
5. சாலைப்புறமாக (ச்) செ
6. ச (ய்) த நிலம் (கால் செ)
7. சய் நிலம் கற்கண்
8. ணுக்கு மேல்
16. குளமுள்ப்
17. பட நீர் நி
18. லமாந
19. தெல்லா
20. ம் தேவர்
21. க்கு அவ்
22. வூரரோ

## எண் : 116

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் மண்டபத்தில் இருக்கும் தனிக்கல்

அரசர் : சோழன், உத்தமன்

காலம் : கி.பி. 980

மொழி : தமிழ் தெ.இ.க.தொ. 19 - 275

செய்தி : பிரதிகண்டன்தரச் சோழன் என்பவன் திருவறப்பள்ளி ஆழ்வார்க்குக் கார்த்திகைத் திருவிழாவின் பொருட்டுச் சாலைப் புறமாக அரை செய் நிலம், குளம் உட்படக் கொடையாக அளித்தமை. கல்வெட்டுச் சிதைந்துள்ளது.



கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கோபரகேச
3. ரிபன்றமக்குச்
4. செல்லா நிற்கு யா
5. ண்டு பத்தாவ
6. து ப்ரதிகண்டன்
7. தர சோழனேன் தி
8. ருவறப்பள்ளி ஆழ்
9. வார்க்கு கார்த்திகை
10. க் கா (ர்) த்திகை திருவி
11. ழாவுக்குச் சா (லை)
12. புறமாக செ (ய்) த நில
13. ம் தாழன் நிலம் அ
14. ரை நில (ம்) கற்கண்ணு
15. க்கு மேலை (செய்க்கு)
16. ளமுட் . . . . . . . . . .

## எண் : 125

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறயின் தென்புறச்சுவர்

அரசர் : சோழன், இரண்டாம் இராசாதிராசன்

காலம் : கி.பி. 1172

மொழி : தமிழ் க.ஆ.அ. 501 - 1929 - 30

செய்தி : வீற்றிருந்தாந்சேமாண்டாரான பிள்ளை அகளங்க நாடாழ்வக்குக்கொல்லிமலை நாட்டு மலையாளர்கள் ஒன்பதாவது ஆண்டு முதல் தாங்கள் வரி செலுத்துவதாக உடன்பட்டுத்திருவறப்பள்ளியுடையார் திருக்கற்றளியில் கல்வெட்டிக் கொடுத்தமை.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவநச் சக்கரவற் . . . சாதிராச தேவற்கு யாண்டு ஒந்பதாவது
2. வீற்றிருந்தாந் சேமாண்டாராந பிள்ளை . . . . ாடாழ்வாருக்கு கொல்லிமலை நா
3. ட்டு மலையாளரோம் உடையா . . . . வறப்பள்ளியுடையார் திருக்கற்ற
4. ளியில் கல்வெட்டிக் குடுத்த பரி . . . . ந்பதாவது முதல் நாங்கள் கட
5. மை இறுக்கக் கடவதாக இந்தப்படி மலையாளர்ரோம் கொடுவாள் முத்து
6. டைகு கொங்கத்தால் தூ ணித் திநையும் நாழிதி . . . . கோற்பு /ழுகும்/ ஆட்
7. டைவரை யிறுக்க கடவோமாகவும் குறைவறுப்புக் /கு/ . . . .
8. கு /ழும்/ பச்சை எழுந்தருளியிருக்க /மு/க் தெரிவிக்கக் கடவோ மாகவும்

# எண் : 128

**இடம் :** ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் வடக்குப்புறச் சுவர்

**அரசர் :** பொன்னேரிவர்மன்

**காலம் :** கி.பி. 12 ஆம் நூற்றாண்டு

**மொழி :** தமிழ் க.ஆ.அ. 493 - 1929 - 30

**செய்தி :** பொன்னேரிவர்மனின் இருபத்திரண்டாம் ஆட்சியாண்டில் அறப்பள்ளி இறைவர்க்கு இரு நந்தாவிளக்குகள் வைக்க ஆவன செய்யப்பெற்று அவரால் நிலமும் கொடுக்கப்பெற்றது. இச்செய்தி ஒரு செப்பேட்டின் மெய்ப்படி என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளது. இக் கல்வெட்டின் சில பகுதிகள் கிடைக்கப் பெறாமையால் செய்தித் தொடர்பை அறிய இயலவில்லை.



கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ திருவறப்பள்ளியாண்டார் செப்பெட்டுப்படி ஸ்ரீ பொந்நேரி பன்மர்கு யாண்டு
2. இருபத்திராண்டாவது இவ்வாண்டு ஆவணித் திங்கள் சூர்ய க்ரஹண எல்லைக் கள கொள்ளிம . . . .
திருவறப்பள்ளி மஹாதேவற்கு இரண்டு திருநொந்தா விளக்கெரிப்பதற்கு ஐவுழக்கரிசியிட்ட . . .
3. தெற்கும் வீதி திருவறப்பள்ளி ஸபையார் கையில் ஸர்வபரிகாரத் தோடும் உதகபூர்வ . . . .
4. பொன்நேரி பன்மநாலக் குடுக்கப்பட்ட பூமிக்குக் குடுத்த வெல்லை மேற்கு மலைக்குக் கிழக்கு . . . .
றுக்குத் தெற்கும் கொடுக்க மங்கலத்திநின்றும் சிறுபுத்தூ ர்க்கு இயங்கின பெருவழிக்கு . . . . . . . .
சிறுபுத்தூ ர் எல்லைக்கு உடக்கும் ஆக இப்படிப்பட்ட எல்லை குறித்து இப்பூமி குடுத்தேன் பொந்நேரிபற்ம
ன் இது சேர சோழ பாண்டிர்கள் முக்கோக்கள் ரக்ஷை ஸ்ரீ மஹேஶ்வரர் ரக்ஷை கொல்லிமலை நாட்டா . . . . . .
5. ஐஞ்ஞூற்றுவர் ரக்ஷை இத்தருமம் அழியு செய்வான் கெங்கை . . . . . .
யிற்ற வழி அருளிநாலச் செப்பேடு வெட்டிநேந் ஓகைநாட்டுபுல்லூர் அதியமான் பெருநா . . . .
. . . ரள் பாவமுந்தழிதயேந இவை எந்நேழுத்து

## எண் : 129

**இடம்** : ஊர் - கொல்லிமலை  வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் மேற்குப்புறச்சுவர்

**அரசர்** : . . . . . . . . . . . . . . . . .

**காலம்** : கி.பி. 12 ஆம் நூற்றாண்டு

**மொழி** : தமிழ்  க.ஆ.அ. 495 - 1929 - 30

**செய்தி** : வீராணச்செட்டி பெற்ற இருபத்தைந்து கழஞ்சுப் பொன்னுக்கும் கழஞ்சுக்கு ஆறு மாதத்திற்குத் தூணி நெல்லாக ஆண்டுக்கு நெல் பதினாறு கலனே இருதூணி நெல்லைக் கொண்டு 'கறடிகை' என்னும் கருவியை இசைக்கும் இசைஞனுக்கு நாள் ஒன்றுக்கு கொங்கத்தால் மூன்று நாழியாக ஆண்டுக்குப் பதினொரு கலனே முக்குறுணி அளிக்கப்பெற்றது. எஞ்சிய ஐங்கலனே ஐங்குறுணி நெல்லைக் கொண்டு திருவறப்பள்ளியுடையார்கசு மூன்று சந்திக்கும் படைக்கப் பெற்றமை.

**கல்வெட்டு :**

1. வெருணா ற் அறப்பள்ளியுடாந் வீராணச் செட்டி கடவபொந் இருபத்தைங் கழஞ்சும் கழஞ்சிந் வாய் ஆறு திங்கள்த் துணியாக ஆட்டை வட்
2. டம் பதிந்நாறு கலநே இருதூ ணி இந்த நெல் கரடிகை கொட்டுவாந்



ஒருவனுக்கு நித்தம் கொங்கத்தால் முந்நாழி ஆக ஒராட்டைக்கு நெல் பதிந்நொரு
3. கலநே முக்குறுணியும் நீக்கி . . . . . நெல் ஐங்கலநே ஐங்குறுணி நெல்க் கொண்டு திருவறப்பள்ளியுடையார்க்கு ஒரு ஸந்திக்கு அடைக்காயமுர்து நா
4. லும் வெற்றிலை பந்நிரண்டுமாக மூந்து ஸ்ந்திக்கும் அடக்காயமுது பந்நிரண்டு வெற்றிலை முப்பதாறும் சந்திராதித்தவர் செலுத்துவதாகவும்

## எண் : 132

| | | | |
|---|---|---|---|
| இடம் | : | ஊர் - கொல்லிமலை<br>அறப்பள்ளி ஈசுவரர் கோவில் வடக்குசுற்றுச் சுவர் | வட்டம் - நாமக்கல் |
| அரசர் | : | . . . . . . . . . . . . . . . . . . | |
| காலம் | : | 06.02.1771 | |
| மொழி | : | தமிழ் | க.ஆ.அ. 506 - 1929 - 30 |
| செய்தி | : | அறப்பள்ளி ஈசுவரர் தாயம்மனுக்குத் திருக்குடமுழுக்குச் செய்யப் பெற்றமை. | |



கல்வெட்டு :

1. சாலிவாகன சகாப்
2. தம் 1692 மே
3. ற் செல்லா நின்ற (கலி)
4. 4871 செல்லா 'நி
5. ண்ற விகுறுதி வருஷ
6. ம் தை மாஸம் 27
7. புதன் கிழமை சுவாதி
8. நச்சத்திரமும் விறுதி
9. நாம யோகமும் பெ
10. ற்ற சுப தினத்தில்
11. அறப்பள்ளி யீசுவரர்
12. தாயம்மனுக்கு அவ்ஷ
13. ட பந்தனம் நிறவே
14. வன . . . . . ச . . . . ததெறுனா
15. வ . . . . . . . . . . . . . . . . . .

## எண் : 131

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் வடக்குப்புறச்சுவர்

அரசர் : . . . . . . . . . . . . . . .

காலம் : 14.08.1770

மொழி : தமிழ் க.ஆ.அ. 507 - 1929 - 30

செய்தி : கூ வாசல் உடையான் திருநாதர் சங்கமதேவன் என்பான் அறப்பள்ளி ஈசுவரர்க்கும் நாச்சியார்க்கும் இளைய நாயனார்க்கும் வழிபாட்டின் பொருட்டு நிலமும் நந்தவனமும் கொடையாகக் கொடுத்தமை.

கல்வெட்டு :

1. விகுருதி வருஷம் ஆவணி மாதம் இரண்டாந் தியதி கு( )வாசல்
2 உடையான் திருமலைநாதர் சங்கம தேவன் அறப்பள்ளி
3. நாதர் தம்பிரானாற்க்கும் நாச்சியார்க்கும் இளையநயினாரிற
4. கும் . . . விணைமாலையும் தொண்டை மாலையும் கட்ட
5. நந்(தவ)ானம் பயிர் செயிறபேற்கு இலக்கைக்கு கட்டளை
6. இ . . . . (ே) காயில் ஊரில் காணி உடைய உப்ப . . . பா
7. லூ டு . . . . குளத்தில் கீழ்வயல் கோயிலூ ருக்கு தெற் . .
8. . . . ரைநாட்டு வயல் தளை . . .
9. ரை . . . வயல் விலை அறிதியாக பாட்டம் . . யிலே
10. கொண்ட விலைப்படி பொன் நாலும் குடுத்துக் கொண்
11. ட வயல் நந்தவானம் பயிர் செய்து திருமாலை கட்ட . . . வா
12. ன் சநதிராதித்தவரையும் அநுபவித்துக் கொள்ள கடவனா
13. கவும் இந்த தம்மத்தை பரிபாலனம் பண்ணி
14. நீடுழி வாழவும் இதுக்கு அகுதம் பண்ணினவந் கெங்கைக்
15. கரையில் காரம் பநிவைக் கொன்ற பாவத்திலே போகக்கடவனாகவும்

## எண் : 130

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் வடக்குப்புறச்சுவர்

அரசர் : விசயநகரர், வேங்கடபதிதேவ மகாராயர்

காலம் : 01.02.1611

மொழி : தமிழ் க.ஆ.அ. 489 - 1929 - 30

செய்தி : நரலோக கண்டவங்கி நாராயணணன் கோனூர் இராமச்சந்திர நாயக்கர் மகன் இம்முடி இராமச்சந்திரர் காலத்தில் அறப்பள்ளி ஈசுவரர் கோவில் திருப்பணி நடைபெற்றது. அந்நாளில் நாச்சியார் திருமேனி ஒன்றையும் எழுந்தருளுவித்தார். குத்தமலை நாட்டின் அசை என்ற ஊர் அக்கோவிலுக்குச் சர்வமானியமாக அளிக்கப்பெற்றது. அவ்வூர் இன்று 'அசக்காடு' என்று வழங்கப்பெறுகிறது.

கல்வெட்டு :

1. ஸிபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீமந் ராஜாதிராஜராஜ பரமேஸ்வரந் ஸ்ரீ வெங்கடபதி தேவ மஹாராயர்
2. ப்ருத்விராஜ்யம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் 1532 இதன் மேல் செல்லாநின்ற சாதாருண வருஷம் மாசி மாதம் 5 தேதி விசுவ நாத வீரப்ப முத்துவிரப்ப நாயக்கர் காலத்தில் நரலோக கண்ட வங்கி நாராயணன் கோனூ ர் றாமச்சந்திரானாயக்கர்
3. குமாரர் இம்முடி றாமச்சந்திரனாயக்கர் புண்ணியமாக அறப்பள்லி ஈஸ்வரந்னாச்சியார் ஜீர்னோதாரமாகையில் வாசல்ப் பிறதாநி
4. விந்தியுடை பிச்சனார் அம்பாயிரம் செல்ல உகந்தாரும் கஸ்தூ ரி ணாயக்கரும் மல்லணனாயக்கரும் வாசல் பேரும் அனுகூலமாய்
5. அகிலாண்ட தீக்ஷிதா சிற்பாசாரி அவிநாசியும் நாச்சியார் திருமேனிக் கொண்டு பிறதிட்டை வேலையில் ஸஹிஷரண்டோதர தாரா பூ
6. றுவமாக குத்தமலை னாட்டில சைக்கிறாமம் அறப்பள்ளி ஈஸ்வரனுக்கு சறுவமானியமாகதார வாத்துக் குடுத்தபடியின்
7. இந்த தனமத்தை சந்திராதித்த வரையும் இத்தம்மத்தை . . . பரிபாலனம் பண்ணி னடத்தி வரக் கடவராகவும் இதுக்கு அகுதம் பண்ணினால் (கங்)கைக் கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலேயும் தன்மின . . . தா . . நா . . . கொன்ற தோஷத்திலேயும் போக கடவராகவும் இத்தன்மசாதனம் எழுதினமைக்கு பள்ளி கொ . . . பாரதியார்
8. நல்ல தம்பியார் நல உல . . . மிகு . . . .

## எண் : 133

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் தாயம்மை சன்னதியின் கிழக்குப்புறச்சுவர்

அரசர் : . . . . . . . . . . . . . . . . .

காலம் : 11.09.1823

க.ஆ.அ. 508 - 1929 - 30

மொழி : தமிழ்

செய்தி : அறப்பள்ளி ஈசுவரர்க்கும் தாயம்மைக்கும் துறையூர் வட்ட இராச நரசிங்கராயர் ஆட்சி செய்த நாளில் அம்மனுக்கு விமானம் அமைத்துத் திருகுடமுழுக்குச் செய்யப்பெற்றமை.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1745க்கு கல்லியு
2. கம் 4924க்கு சுபானு வருஷம் ஆவணி மாதம் 28 தேதியில்
3. அறப்பள்ளி ஈசுவரர் சுவாமிக்கும் ஸ்ரீ தாயம்மாளுக்கும் துறையூர் தா
4. லுகா வாசி ராஜநரசிங்கராயர் தாசிலில் சுவாமிக்கும அம்மனு
5. க்கும் விமான உத் . . . . தகலம் வெச்சு கும்பா அபிஷேகம் அஷ்ட
6. பந்தனம் நடந்த தந்மம் . . . . . . . .

எண் : 126

இடம் : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் தென்புறச்சுவர்

அரசர் : சோழன், இரண்டாம் இராசாதிராசன்

காலம் : கி.பி. 1173

மொழி : தமிழ் க.ஆ.அ. 496 - 1929 - 30

செய்தி : வீற்றிருந்தான் சேமாசன்பாரான அகளங்க நாடாழ்வான் என்பவன் கொல்லிமலை கொண்ட காலத்தில் திருக்களிற்றுப்படி நம்பி என்பான் அறப்பள்ளி இறைவர்க்கும் நாச்சியார்க்கும் மார்கழித் திருவாதிரை நோன்புக்கு வெருணூர்ப்பள்ள வழியில் நிலம் விட்ட செய்தி.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ இராசாதிராச தேவர்க்கு யாண்டு பத்தாவது வீற்றிருந்தான் சேமான அகளங்க நாடா
2. ழ்வார் கொல்லிமலை கொண்ட நாளில் ஊத்தூர் கூற்றத்து கூடலூர் நாட்டுப் பனை
3. யூருடைய அரையமகன்பியாமாத்தநா . . . திருக்களிற்றுப்படி நம்ப' யேந் திருவற
4. ப்பள்ளி உடையாற்கு மார்கழித் திருவாதிரைக்கு ஆளுடைய நாச்சியார்க்கு திருநோன்பு நாள்கொண்டுடைய
5. பூமி வெருணூர்ப் பள்ள வழியில் குந்தன வரம்பநாத திகை மாணிக்கச் செட்டி செயிந் கீழ் வரம்பு காட
6. ன் காள திருவாலி செய்க்கு மேல் வரம்பு முன் . . . க்கு . . . முக்குறுணி நெல் விதையும் அகளங்க நாடாழ்வாற்கு (. . . . . . . திருவாந்தகத் துக்கு) ந
7. . . . க இந்த நில சந்திராதித்தவரை செல்ல விட்டேந்
8. திருக்களிற்றுப்படி நம்பியேந்

## எண் : 127

**இடம்** : ஊர் - கொல்லிமலை வட்டம் - நாமக்கல்
அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் வடக்குபுறச்சுவர்

**அரசர்** : . . . . . . . . . . . . . . . .

**காலம்** : கி.பி. 12 ஆம் நூற்றாண்டு

**மொழி** : தமிழ் க.ஆ.அ. 492 - 1929 - 30

**செய்தி** : கருங்கயம் என்னும் ஊரிலிருந்த பல குடிகளும் சேர்ந்து பதினெட்டரைக் கழஞ்சுப் பொன் கொடுத்தனர். ஒரு கழஞ்சுக்கு ஆறு திங்களுக்கு வட்டியாகத் தூணி நெல் வீதம் பெறப்பட்டது. அந்நெல்லைக் கொண்டு திருவறப்பள்ளி உடையார்க்குச்



சந்திக்கு அமுது படைக்கப் பெற்றது. இவ்வாறே காமுளூர் ஊரின் பல குடிகளும் அளித்தனர். அது ஆடவல்லார் நடராசப் பெருமானுக்குப் படைக்கப் பெற்றது. வெருவணூர் திகைமாணிக்கச் செட்டி நிலத்தின் பல குடிகள் சேர்ந்து நம்பிராட்டியார் கோவிலுக்குப் படையல் அளித்தனர்.

**கல்வெட்டு :**

1. கருங்கையத்து பல குடிகளாய்க் கடவ பொந் பதிநெண்கழஞ்சரை கழஞ்சிந்வாய் ஆறு திங்கள்த் தூணியாக ஆட்டை வட்டம் கடவ பப் பலிசை நெல்
2. பந்நிரு கலநே தூணி இந்த நெல்க் கொண்டு திருவறப்பள்லி யுடையார்க்கு ஒரு சந்திக்கு காணத்தால் நாழியுழக்கரிசியால் ஒரு திருவமுர்தும் இரண்டு கறி யமுர்தும் சந்ராதித்தவற் செலுத்துவதாகவும்
3. . . . . . . . காமுள்ப் பல குடிகளாய்க் கடவ பொன் பதிநெண் கழஞ்சரை கழஞ்சிந்வாயாறு திங்கள் தூ ணியாக ஆட்டை வட்டம் கடவ பூப் பலிசை நெல் பந்நிரு கலநே தூ ணி இந்த நெல்க் கொண்டு ஆடவலார்க்
4. கு ஒரு ஸந்திக்கு காணத்தால் நாழியுழக் கரிசியால் ஒரு திருவமுர்தும் இரண்டு கறியமுர்தும் சந்திராதித்தவர் செல்லுவதாகவும் வெருணூ ரச் சடையநிறப்பளியான் திகைமாணிக்கச்செட்டி நிலம் வைத்து . . . . .
5. . . . ர்ப்பல குடிகளாய்க் கடவ பொந் கழஞ்சும் ஆகப் பொன் பதிநெண் கழஞ்சு
6. கழஞ்சிந் வாய் ஆறு திங்கள்த் தூணியாக ஆட்டை வட்டம் கடவ பூப்பலி
7. ச நெல் பந்நிரு கலம் இந்த நெல் கொண்டு நம் பிராட்டியார்க்கு ஒரு ஸந்திக்கு
8. காணத்தால் நாழியுழக்கரிசியால் ஒரு திருவமுர்தும் இரண்டு கரியமுர்தும் சந்திராதி
9. த்தவர் செலுத்துவதாகவும்